# சௌத் இந்தியா ஸ்ட்ரக்சுரல் கார்ப்பரேஷன் லிமிட்டெட்

6, அரண்மனைக்காரத் தெரு,
சென்னை-1.

*

எல்லாவிதமான கட்டிட, ஸ்டீல் நிர்மாண வேலைகளும், மெஷின் ஷாப் வேலைகளும் ஏற்றுக்கொள்ளப்படும்.

*

தயவு செய்து அணுகவும்:

ஒர்க்ஷாப் டிபார்ட்மெண்ட்,

1050, திருவொற்றியூர் நெடுஞ்சாலை,
சென்னை-19.

தொலைபேசி எண்:
அலுவலகம்: 27837
ஒர்க்ஸ் : 53306

தந்தி:
'SOUTHINCO'



# நகரத்தார்

திங்கள் இதழ்
61, D, உசுமான்சாலை - சென்னை-17

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு

சௌமிய - தை — ஜனவரி - 1970

ஆண்டுக் கட்டணம் ரூ. 3-50

ஆசிரியர்
புலவர்நாகசண்முகம்

பரிந்துரையாளர்
எஸ். பிஎல். பழநியப்பா, பி.ஏ.,பி.எல்,

குறிப்பு ஒன்று — பேரேடு பத்து



அன்பருக்கு அருள்வழங்கி மன்பதையை வாழ வைக்கும்
ஐயப்பர்
இந்த இதழ் அட்டையை அலங்கரிக்கின்றார்.

# செல்வங்கள் ஏழு?

16-ம் பக்கம் பாருங்கள்.

---

யுனெஸ்கோவின் இலக்கியப் போட்டியில்
முதற் பரிசு பெற்ற

## மரங்களின் கதை

என்ற நூலினை எழுதிய

**திரு. நாகமுத்தையா** அவர்கள்

நம் இதழ், சிறுவர் அரங்கத்தில் மாணவர் உலகிற்கு,
தொடர்கதை ஒன்றினை எழுதப்போகிறார்கள் !
எப்பொழுது? என்ன கதை? என்ற விவரங்களை
அடுத்த இதழில் காணுங்கள் !

## கேள்வி? பதில்!

பகுதி அடுத்த இதழில் இடம்பெறுகிறது.
விரிவாகவும் விரைவாகவும் பல்துறைக் கேள்விகளை எதிர்பார்க்கின்றோம்.





திரு. ஆறு. அழகப்பன் எம்.ஏ. எம்.லிட். அவர்களின் கறிவேப்பிலை நாடக நூலுக்கு இதழாசிரியர் புலவர் எழுதிய ஆய்வுரை 22-ஆம் பக்கம் இடம் பெற்றுள்ளது.




# நம்பிக்கை!

"நம் மரபினர் ஆர்வமும் துடிப்பும் முன்னேற்றமும் உள்ள சமுகத்தினராக மாற ஒரேவழி நம்மரபுப் பெண்கள் அனைவரும் கல்விச்செல்வத்தைப் பெறுவதுதான்" என்று ஆனித் திங்கள் இதழ் எண்ணத்தில் குறிப்பிட்டிருந்தோம்.

வருங்காலப் பெண்கள் வளரவும் வாழவும் கல்விச் செல்வம் இன்றியமையாதது. அதேபொழுது வளர்ந்து வாழ்வை நாடி நிற்கும் பெண்களைப் பற்றிய எண்ணம் இப்பொழுது நமக்குத் தோன்றுகிறது.

தை பிறந்ததும் இந்த எண்ணம் பிறப்பதில் வியப்பில்லை அல்லவா?

பல பெண்கள் மணப்பருவம் எய்தியும் மணத்தினைப் பெருதிருப்பதற்கு இன்றியமையாத காரணங்கள், பிள்ளைவீட்டார் சீர்வரிசைகளாக எதிர்பார்க்கும் தொகைகளைக் கொடுக்க முடியாமை — வழிவழியாக வரும் முறைகளைக் குறைத்துக்கொண்டு திருமணச் செலவுகளைக் குறைக்க முடியாமை.

பிள்ளைவீட்டார்கள் என்று வருகின்றபொழுது அவர்கள் தங்கள் வீட்டில் உள்ள பெண்களுக்குச் சீர்செய்துதானே ஆக வேண்டியதிருக்கிறது.

எனவே பண்டமாற்று முறையில் பெரும் செல்வம் வீணுகிறது என்பதோடு வழியற்றவர்கள் இந்தச் செலவுகளை ஈடுசெய்ய முடியாது தவிக்கிருர்கள் என்பது கண்கூடாகும்.

நடுத்தரக் குடும்பத்து மக்கள் இதனை எண்ணி நன்கு சிந்தித்துத் தம் குடும்பங்களிலே உள்ள பெண்களுக்கு வாழ்வு தர முன்வருவார்கள் என நம்புகிறோம்.

# தைத் திருநாள்!

மாநகரி. அ. முருகப்ப செட்டியார்

கார்குலங்கள் நன்மாரி காலத்தே பெய்திடவே
நீர்நிலையும் நெல்மணியும் நிறைந்ததென்று இன்பமுற்ற
ஏர்உழவர் வேளாண்மை எல்லாம் முடிந்ததென்று
பார்மகிழப் பொங்கல்வைத்துப் பால்பொங்கும்
தைத்திருநாள்!

ஏர்உழுத காளைகளை இன்புறவே நீராட்டிப்
பார்மதிக்கக் கொம்புகட்குப் பல்வண்ண மைதீட்டிச்
சீர்துலங்கப் பொட்டுமிட்டுச் சிங்கார வேட்டிகட்டி
ஊர்மக்கள் தாம்திரண்டு ஓட்டிமகிழ் தைத்திருநாள்'

அன்னநடை மின்னலிடை அழகுதவழ் மங்கையரும்
கன்னல்மொழி கொஞ்சுமெழில் காதலுறும் மைந்தர்களும்
பொன்னொளிரும் பட்டுடுத்திப் பூவைத்துப் பொட்டுமிட்டுத்
தென்னகத்தில் பூசிக்கும் சிறப்புமிகு தைத்திருநாள்!

# அருள்பொழிய வேண்டுவோம்

காரைக்குடி சொ. அண்ணாமலை

நாடும் செழித்துயர
நம் வாழ்வும் செம்மைபெற
வீடும் விளக்கமுற
மேதினியோர் மனம்மகிழ
பாடும் தமிழ் வளரப்
பாற்பொங்கல் திருநாளில்
ஆடும் அம்பலவன்
அருள்பொழிய வேண்டுவமே.



டாக்டர் சுப. அண்ணுமலை



டாக்டர் தமிழண்ணல்



டாக்டர் வெ. தெ. மாணிக்கம்

# அழகப்பா தமிழ் மன்றத்தின் அன்புமிகு பாராட்டு

பாராட்டப் பெற்றவர்கள் மூன்று டாக்டர்கள்.

பாராட்டுக் கவிதையினை நல்கியவர்கள் ம. கண்ணப்பன் எம்.ஏ.பி.டி., அவர்கள்

டாக்டர் சுப. அண்ணுமலை, டாக்டர் தமிழண்ணல் ஆகியோர் பற்றிய செய்திகளை முன்னரே நம் இதழில் வெளியிட்டுள்ளோம் என்பதனை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். எனவே டாக்டர் வெ. தெ. மாணிக்கம் அவர்களைப் பற்றிய செய்திகளை அடுத்த பக்கத்தில் தந்துள்ளோம்.

டாக்டர் மாணிக்கம் அவர்கள் பிறந்த ஊர் : வேந்தன்பட்டி. பிறந்த நாள் : 14—10—1933.

பெற்றோர்கள் :-- ப.மு க. கருப்பஞ் செட்டியார், இராமாமிர்த ஆச்சி. வளர்ப்பு மகனாக ஏற்றுக் கொண்ட பெற்றோர்கள் வெ. தெ. தேனப்பச் செட்டியார், இலக்குமி ஆச்சி. இளமைக் கல்வியை மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சபைத் தொடக்கப் பள்ளியிலும் உயர்நிலைக் கல்வியைப் புதுக்கோட்டை ரி. எஸ். எம். உயர்நிலைப் பள்ளியிலும் இடைநிலைக் கல்வியைத் திருச்சி புனித சூசையப்பர் கல்லூரியிலும் இளங் கலைக் (B.A.,) கல்வியைக் காரைக்குடி அழகப்பா கல்லூரியிலும் கற்றுத் தேர்ந்தார்கள். இளங்கலை இறுதியாண்டு பயிலும்போது (1958) அழகப்பா கல்லூரி மாணவர் பேரவையின் தலைவராக இருந்து பணியாற்றியுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாண்டுகள் மலைநாட்டுக்குச் சென்று வந்த அவர்கள் முதுகலைக் (M.A.,) கல்வியை அழகப்பா கல்லூரியிலேயே கற்றார்கள். 1962-ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்திலேயே முதல் மாணவராகத் தேர்வு பெற்றுத் தங்கப்.பதக்கங்கள், பண முடிப்புகள், நூல்கள் முதலிய பல பரிசுகளைப் பெற்றார்கள்.

இந்தச் சிறப்பிற்கு டாக்டர் வ.சுப. மாணிக்கனார் அவர்களுடைய நற்போதனையும் நல்ல அன்புமே காரணங்கள் என்று டாக்டர் அவர்கள் பெருமிதத்தோடு குறிப்பிடுகிறார்கள். எம்.ஏ. தேர்வில் வெற்றிபெற்ற பிறகு டாக்டர் மு. வரதராசனாரின் கீழ் சென்னைப் பல்கலைக் கழக ஆய்வுத் துறையில் ஆராய்ச்சியாளராக அமர்ந்து 'தமிழ் இலக்கியத்தில் மருதத் திணை' என்ற தலைப்பில், ஆய்வு நூல் ஒன்றினை நல்கி, டாக்டர் (Ph.D,,) பட்டம் பெற்றுள்ளார்கள்.

அண்மையில் நடைபெற்ற இரு உலகத் தமிழ் மாநாடுகளிலும் கலந்துகொண்டு ஆய்வுக் கட்டுரைகளைப் படித்துள்ளார்கள்.

டாக்டர் அவர்கள், காரைக்குடிக் கல்வி வள்ளல் உயர் திரு. இராம. வீர. இராம. இராமசாமிச் செட்டியார் அவர்களின் மாப்பிள்ளை என்பதனையும் மகிழ்ச்சியோடு குறிப்பிடுகின்றோம்.

## டாக்டர். சுப. அண்ணாமலை எம்.ஏ. எம் லிட், பிஎச்.டி.

ஆராய்ச்சிப்பொருள்:—திருவருட்பா

"வான்கலந்த மாணிக்க வாசகரின் வாசகத்தில்
வாய்மையோடு
தான்கலந்து படித்தமகன் தந்திட்ட
திருவருட்பாச் சோலை தன்னில்
தேன்கலந்து பூத்திருக்கும் திரளான
பூக்களிலே உள்ள தேனை
மின்கலந்த மதுரையிலே தானமர்ந்து நீ
எடுத்துத்தந்ததாலே

கத்துகடல் தாலாட்டக் காவிரியாள்
பாலூட்ட வளரும் நாட்டின்
வித்தகர்கள் பாராட்ட முத்தமிழும்
சீராட்டப் பட்டம் பெற்ற
உத்தமனே! தமிழ்சொல்லும் உயர்ந்தவனே!
தமிழ்த்தாயின் உள்ளம் போற்றச்
சித்திரையாய் வள்ளுவனின் முத்திரையாய்
என்றென்றும் சிறந்து வாழ்க!

## டாக்டர் தமிழண்ணல் எம்.ஏ. பி.எச்.டி'

ஆராய்ச்சிப் பொருள்:—சங்க இலக்கிய மரபியல்

வரவியலைக் கணக்கெடுத்து வாழ்வோர்கள் சூழ்ந்திருக்கும்
உலகம் தன்னில்
மரபியலை, அகப்பாட்டாம் மணக்கவரும் தமிழ்ப்பாட்டில்
புலவர் சென்ற
மரபியலைக் கணக்கெடுத்து மதிப்புயர்ந்த ஒருபட்டம்
பெற்ற எங்கள்
கரப்பறியாத் தமிழண்ணல் கார்மேகத் திடை மின்னல்
கவிதைப் பின்னல்

தாலாட்டத் தெரியாத தாய்மார்கள் வாழ்கையிலே
உனக்கு மட்டும்

தாலாட்டத் தெரிந்தமுறை? தமிழறிந்த முறையாலா
தாயின் கையில்
வாலாட்டும் சிறுகுழந்தை வாய்மலரும் மழலையினை
மறக்க வைக்க
நூலாக்க அரசாங்கம் ஆளாக்க நூறாண்டு
காலம் வாழ்க''

## டாக்டர். வெ. தெ. மாணிக்கம் எம்.ஏ. பி.எச்.டி.

ஆராய்ச்சிப்பொருள்:—மருதம்

கம்மாயில் சிறுவரெல்லாம் கால்பந் தாடும்
கடும்பஞ்ச நாட்டினிலே கல்வித் தேனை
அம்மாஎன் றழைக்கின்ற சிறுவர்க் கெல்லாம்
அள்ளியள்ளி ஈந்திட்டஅழகன் கண்ட
நம்முடைய கல்லூரிப் படிக்கட் டேறி
நாள்தோறும் தமிழமுதம் பருகிச் சென்ற
எம்முடைய நல்நண்ப! ஏட்டிலேனும்
எழிலான மருதவளம் காண்போம என்று?

இல்லத்தில் அவள் ஊட, இலக்கியத்தில்
எழும்ஊடல் தனைப்போக்கத் தலைவன் செய்யும்
கள்ளத்தை நாம்கொஞ்சம் கற்றால் விட்டுக்
காரிகையின் ஊடலினைக் களைந்துகூடல்
வெல்லத்தை அடைந்திடலாம் என்று? நீங்கள்
விளைநிலமாம் மருதத்தை எடுத்தீர்? என்றே
செல்லத்தால் கேட்கின்றோம் பட்டம் என்ற
செந்நெல்லை விளைத்தவரே! சிறந்து வாழ்க


பழநிமலைக்
காவடி
புலவர் நாகசண்முகம்

## 6. எனக்கென்ன அச்சம்?

தஞ்சாவூரைக் கார் நெருங்கிய போதே வானுயர நின்ற பெரியகோயில் கோபுரத்தின் எழுச்சி மிக்க காட்சி அருணசல ஐயாவுக்கு வரவேற்புக் கூறுவது போல இருந்தது.

நல்ல உணவை எத்தனை நாள் உண்டாலும திகட்டுவதில்லை. நல்ல நூலை எத்தனை முறை படித்தாலும் சலிப்பு ஏற்படுவதில்லை. நல்ல காட்சிகளும் அப்படிப் பட்டவைதாம்.

ஐயா, எத்தனையோ முறை அந்தக் கோபுரத்தைப் பார்த்திருக்கிறார்கள். அந்த முறை பார்த்தபோதும் அவர்களுக்குப் பெரும் சிலிர்ப்பு ஏற்பட்டது.

வீடோ, நாடோ அவற்றின் சிறப்பும் செம்மையும் உயர்வும் தலைவனைப் பொறுத்தே இருக்கின்றன என்று அவர்களுக்குத் தோன்றியது. இராசராச சோழன் என்ற தனிப்பட்டவனுடைய முயற்சியால் உருவானது தானே பெரிய கோயில்? ஆயிரக் கணக்கானவர்கள் அந்த அரும்பணியில் ஈடுபட்டிருக்கலாம். திட்டமிட்டு ஈடுபடுத்தியவனுக்குத்தானே பெருமை? கரைபுரண்டு வரும் காவிரியிலிருந்து எவ்வளவோ பேர் நீரைப் பயன் படுத்திக் கொள்கிறார்கள் ஆனால், அவர்களெல்லாம் காவிரியாகிவிடுவார்களா? என்றும் அன்னை அன்னை தான். பெரியவர்கள் பெரியவர்கள்தாம், என்று ஐயா நினைத்தார்கள்.

இந்த எண்ணங்களைத் தொடர்ந்து நகரத்தார் பெருமக்கள் செய்த திருப்பணிகளெல்லாம் அவர்கள் நினைவுக்கு வந்தன.

'கல்லைக் கலையாகவும்' தெய்வத் திருக்கோயில் களாகவும் முதலில் பெரிய அளவில் ஆக்கிய பெருமை பல்லவ மன்னர்களையே சேரும். அடுத்து அந்தப் பெருமைக்குரியவர்களாக விளங்கியவர்கள் சோழப் பெருமன்னர்களே யாவார்கள். அவர்களை யடுத்து நாயக்க மன்னர்கள் அந்தப் பணியைச் செய்தார்கள். அவர்களை யடுத்து அந்தப்பணியை ஒப்பாரும் மிக்காரும் அற்ற முறையில் செய்த பெருமை நம் நகரத்தார் சமூகத்தாரையே சேரும். அரசர்கள் செய்த காரியத்தை வணிகர்களாக இருந்து செய்தும் அதற்கேற்ற சிறப்பும் உயர்வும் நாட்டில் நம் சமூகத்தினருக்கு இருக்கின்றனவா, என்று ஐயா தமக்குத்தாமே கேட்டுக் கொண்டார்கள்.

இதற்கிடையே சிவராயர் தோட்டம் முதல் தெருவிலுள்ள காசிச் செட்டியார் வீட்டிற்கு

முன்னே கொண்டு வந்து கண்ணுயிரம் காரை நிறுத்தினுன்.

வட்டிக்கடை இருந்த வீட்டிலேயே காசிச் செட்டியார் குடும்பத்தோடு இருந்தார்கள். வீட்டு முன் படிக் கட்டில் நாற்பது வயது மதிக்கத்தக்க ஓர் ஆச்சி உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்க ருகில் நான்கு ஐந்து வயது மதிக்கத்தக்க ஒரு பையன் கால் சட்டை கூட இல்லாமல் நின்றுகொண்டிருந்தான்.

சற்றுத் தொலைவிலே ஒருவன் பனங்கிழங்கு விற்றபடி சென்றுகொண்டிருந்தான்.

அந்தப் பையன் அவனைச் சுட்டிக்காட்டி, "ஆத்தா! பனங்கிழங்கு; ஆத்தா! பனங்கிழங்கு" என்று அழும் குரலில் கத்தியபடியே குதிக்கத் தொடங்கினுன்.

"அட பட்டுக் கிடப்பே. ஒரு நாளைக்கு எத்தனை தரமுடா பனங்கிழங்கு வாங்கறது?" என்று அந்த ஆச்சி சீறினுர்கள்.

"ஐயா! இந்த ஆச்சிதான் காசிச் செட்டியார் சம்சாரம்" என்று மெல்லியகுரலில் கூறிய கண்ணுயிரம் காரை விட்டு இறங்கி, ஐயா இறங்குவதற்காகப் பின் பக்கத்துக் கதவைத் திறந்தான்.

காரையும் கண்ணுயிரத்தையும் பார்த்த காசிச் செட்டியாரின் மனைவி மங்கை ஆச்சியின் முகம் கருத்தது. இயல்பாகவே அவர்கள் கருமைநிறம் உடையவர்கள்தான் என்றுலும் பொருமையாலும் பகை உணர்ச்சியாலும் அவர்களுடைய உள்ளம் சிறுத்து, முகம் கருத்தது மிகத் தெளிவாகத் தெரிந்தது.

இந்தக் காட்சியைப் பார்த்தபடியே ஐயா காரை விட்டு இறங்கினுர்கள்.

ஐயா இரண்டுதரம் மங்கை ஆச்சியைப் பார்த்திருக்கிறுர்கள். மங்கை ஆச்சிக்கும் ஐயாவைப் பற்றித் தெரியும். ஏதோ பஞ்சாயம் பண்ணத்தான் ஐயா வந்திருக்கிறுர்கள் என்று அவர்கள் நினைத்துக் கொண்டார்கள். படியிலிருந்து எழுந்து, "ஐயா, வாங்க" என்று கூறியவர்கள் டிரைவரைப் பார்த்து, வேண்டா வெறுப்பாக, 'கண்ணுயிரம்' என்று சொன்னுர்கள்.

கண்ணுயிரம் அதைக் காதில் போட்டுக் கொள்ளவே யில்லை. வேகமாகக் காரில் ஏறி அதை

எடுத்துக்கொண்டு போய்ச் சற்றுத் தொலைவிலிருந்த மர நிழலில் நிறுத்திக்கொண்டான்.

கண்ணாயிரத்தின் அலட்சியம் மங்கை ஆச்சியின் உள்ளத்தில் நெருப்பை வாரியிறைத்தது போல இருந்தது. பற்களைக் கடித்தபடியே வீட்டிற்குள்ளே சென்றார்கள்! அவ்வளவுதான், சாமி வந்துவிட்டது போல 'பனங்கிழங்கு...பனங்கிழங்கு' என்று அலறிய படியே பையன் தாயாரின் காலைப் பிடித்துக் கொண்டான்.

பனங்கிழங்கு கேட்ட மகனால் வந்த கோபம் கால் பங்கு. நாத்தனார் வீட்டு டிரைவர் மதிக்காததால் வந்த கோபம் முக்கால் பங்கு. ஆனால், முழுப் பங்கி னுடைய பலனையும் அனுபவிக்க வேண்டிய நிலைமை பையனுக்கே ஏற்பட்டது. திரும்பிய மங்கை ஆச்சி, பையன் முதுகில் பளார் பளார் என்று இரண்டு அடி போட்டு, "பாவி பெறப்ப நீ பனங்கிழங்கு வாங்கித் திங்கிறதுக்குள்ளே என்னைத் தின்னுருவே போலிருக்கே", என்று அலறியபடியே அவனை ஒருபுற மாகத் தள்ளிவிட்டு உள்ளே சென்றார்கள்.

பிறத்தியார் மேல் கோபம் ஏற்பட்டால் அந்தச் சமயம் வசதியாக இருக்கும் என்று எண்ணியே செட்டி நாட்டுப் பெண்களில் சிலர் பிள்ளை பெற்று வைத்துக் கொள்கிறார்கள் போலிருக்கிறது என்று அருணாசல ஐயா நினைத்தபடியே உள்ளே சென்றார்கள்.

வீட்டின் முன்பகுதியிலேயே பெட்டியடி இருந்தது. அங்கே இருந்த காசிச் செட்டியார் பாக்கிக்காரர் ஒருவரோடு பேசிக்கொண்டிருந்தார்கள்.

உள்ளே வந்த மங்கை ஆச்சி, "அருணாசல ஐயா வந்திருக்காங்க" என்று மெல்லிய குரலில் கூறினார்கள்.

இதற்கிடையே ஐயா அங்கு வந்து சேர்ந்தார்கள்.

"ஐயா, வாங்க வாங்க வாங்க, மங்கை! ஐயா வுக்குப் பாய் எடுத்தாந்து போடு" என்று காசிச் செட்டியார் ஆர்ப்பாட்டத்தோடு வரவேற்றார்கள்.

"விரிச்சிருக்கிற பாய்க்கு என்னப்பா?" என்று கூறியபடியே ஐயா பெட்டியடிக்கு அருகில் அமர்ந் தார்கள்.

தம்மோடு பேசிக்கொண்டிருந்த பாக்கிக்கார ரைப் பார்த்து, "அப்ப, நீங்க போய்த்துக் கொஞ்ச நேரம் கழிச்சு வாரிகளா?" என்று காசிச் செட்டியார் கேட்டார்கள்.

அதற்கு உடன்பட்டுக் தலையாட்டிய அவர் அங்கிருந்து எழுந்து சென்றுர்.

"ஏப்பா அவரைப் போகச் சொல்லிட்டே? தொழிலைப் பாரு" என்று ஐயா சொன்னுர்கள்.

"உங்களைவிட தொழில் பெரிசா? அதுசரி என்ன இப்படி அத்தி பூத்தாப்லே இருக்கு?" என்று சிரித்தபடியே காசிச் செட்டியார் கேட்டார்கள்.

"பூக்க வேண்டிய வேளை வந்தா அத்தியும் பூக்குமில்லே?" என்று கூறிவிட்டு ஐயா சிரித்தார்கள்.

"ஐயா பேச்சுக்குச் சொல்லணுமா?" என்று கூறிய காசிச் செட்டியார் அந்தச் சிரிப்பில் கலந்துகொண்டார்கள்.

சற்றுத் தொலையில் நின்றுகொண்டிருந்த மங்கை ஆச்சி "மீனுட்சி, மீனுட்சி" என்று குரல் கொடுத்தார்கள்.

பதினுறு பதினேழு வயது மதிக்கத்தக்க ஒரு பெண் உள்ளே இருந்து வந்தாள்.

"அரைப்படி உழுந்து எடுத்து ஊறவை," என்று மங்கை ஆச்சி கூறினுர்கள்.

"ஆத்தா, நான் சொல்றதைக் கேளு. எனக்கு எண்ணெப் பலகாரம் ஒத்துக்காது. வடைகிடைக்குப் போடவேண்டாம்" என்று ஐயா சொன்னுர்கள்.

"எங்க வீட்டிலேயும் ஒண்ணு ரெண்டு எடுத்துக்கலாம் என்று கூறிய மங்கை ஆச்சி, நீ போடு ஆத்தா" என்று மீனுட்சியைப் பார்த்துச் சொன்னுர்கள்.

இராமையாவோடு தமக்குள்ள நெருக்கத்தைக் குத்திக் காட்டவே எங்க வீட்டிலேயும் ஒண்ணு ரெண்டு எடுத்துக்கலாம் என்று மங்கை ஆச்சி சொன்னுர்கள் என்பதை ஐயா நன்ருகப் புரிந்து கொண்டார்கள். கண்டுங் காணுமல் இருக்க வேண்டும் என்கிருர்களே அதைச் செட்டிய வீட்டுப் பெண்டுகள் சிலபேர் பேசுகிற பொழுதுதான் கைக்கொள்ள வேண்டும் என்பது ஐயா எண்ணம். அவர்கள் பேசுவதற்கெல்லாம் அர்த்தம் பார்த்தால் அது அனர்த்தமாகிப் பேச்சுப் பெருகிப் பெரும் வம்பில் முடிந்து பகைதான் நிலைக்கும் என்று ஐயா அடிக்கடி சொல்வார்கள். எனவே, மங்கை ஆச்சி சொன்னதைக் கவனிக்காதது போல ஐயா பேசாமல் இருந்துவிட்டார்கள்.

அங்கே சிறிது நேரம் அமைதி நிலவியது. அதைக் காசிச் செட்டியார் கலைத்தார்கள்.

"வந்துட்டுப் போறது தான்யா நம்ம மூத்த பொண்ணு. எஸ்.எஸ்.எல்.சி. வரையிலே படிச்சிருக்கு. ரொம்பச் சமர்த்தி. நம்ம புள்ளையைப் பத்தி நாமளே சொல்லிக்கப்படாது. யாராவது நல்ல பையனு இருந்தா சொல்லுங்க." என்று கூறிவிட்டுக் காசிச் செட்டியார் தம் மனைவியைப் பார்த்தார்கள்.

"நல்லா சொல்றேப்பா" என்று ஐயா சொன்னார்கள்.

"இவுகளுக்கு என்ன வேலை, வாரவுக்கிட்டேயும் போறவுக்கிட்டேயும் மாப்பிளைதான் பார்க்கச் சொல்ருங்க. நாங்க கிடக்கிற கிடையிலே இப்ப கல்யாணந்தான் பண்றோம். ஏதோ அது அதுக பாடு ஆயுசோட இருந்தா போதும்னு இருக்கேன் நான்", என்று அலுத்துக் கொண்ட மங்கை ஆச்சி தன் மகளை அழைத்துக் கொஞ்சம் வெங்காயமும் அரிவாள்மணையும் கொண்டுவரச் சொன்னார்கள்.

தாம் வந்த செய்தியைப் பற்றிக் காசியோடு ஒன்றும் தனியாகப் பேச முடியாது போலிருக்கிறதே என்று ஐயா நினைத்தார்கள். தாம் அவனோடு ஒன்றும் பேசக் கூடாது என்பதற்காகத்தான் வெங்காயத்தையும் அரிவாள்மணையையும் மங்கை அங்கே கொண்டுவரச் சொல்லியிருக்கிறாள் என்பதை ஐயா நன்கு தெரிந்து கொண்டார்கள். சிறிது நேரம் யோசித்த அவர்கள், கடை வீதிப் பக்கம் போய்ட்டு வருவோம்" "வாப்பா என்று காசிச் செட்டியாரை அழைத்தார்கள்.

"இந்த வெயில்லே என்னய்யா கடை வீதிக்குப் போறிக. நீங்க சொல்ல வேண்டியதை நல்லா இங்கேயே சொல்லலாம். நான் என்ன பண்ணப் போறேன். ஆச்சி பாடு தம்பி பாடு, என்ன இருந்தாலும் நான் வெளியிலே இருந்து வந்தவதானே?" என்று மங்கை ஆச்சி சற்றுக் கடுகடுப்பாகக் கூறினார்கள்.

அவர்கள் கூறியது ஐயாவுக்கு ஆத்திரத்தை மூட்டியது. என்னதான் இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு அடக்கம், ஒழுக்கம், மட்டு மரியாதை வேண்டாமா? எதற்கெடுத்தாலும் மேட்டுமையாகவே பேசுவது அழகா? அது கவுரவமா? என்று அவர்கள் நினைத்தார்கள். அந்த நிலையில் மேலும் பொறுமையாக இருப்பது சரியல்ல என்று அவர்களுக்குப்பட்டது.

ஆற்றுநீர் அமைதியாகவே ஓடிக்கொண்டிருந்தால் மக்கள் அதனுடைய வேகத்தை, அதன் ஆற்றலை உணரமாட்டார்கள் என்றுதானே என்னவோ இறைவன் அதற்குச் சுழல்களையும் கொடுத்திருக்கிருன்! பெரியோர்களும் அப்படித்தான். அமைதியாகவே இருப்பார்களென்றாலும் அவசியம் நேர்கிற பொழுது சில வார்த்தைகள் மூலமே சுழற்றி அடித்து விடுவார்கள்.

"ஏத்தா மங்கை, நீ என்னைப் பத்தி என்ன நெனச்சுக்கிட்டிருக்கே?" என்று ஐயா கேட்டார்கள்.

மங்கை ஆச்சி, ஐயாவிடமிருந்து அப்படியொரு கேள்வியை எதிர்பார்க்கவில்லை. எனவே அதற்குப் பதில் ஒன்றும் கூருமல் இருந்துவிட்டார்கள்.

ஐயா விடவில்லை. "எனக்கு அறுபது வயசுக்கு மேலே ஆகுது. இன்னைக்கு வரையிலே நான் யாருக்கும் பயந்ததில்லே. எனக்கு அந்த அவசியத்தை ஆண்டவன் வைக்கலே. பெண்டாட்டிக்குக்கூட நான் பயந்தவன் இல்லேன்னு வச்சுக்குவே. ஏன் இதைச் சொல்றேன்னு நம்ம சாதியிலே ரொம்ப பேரு பெண்சாதி சொல்றதைத் தடுத்து மறுத்துச் சொல்லப்படாதுன்னே நினைக்கிருங்க. அது குடும்பத்துக்கே ரொம்பக் கெடுதல். இப்படி நான் சொல்றதுனலே பெண்சாதி அடிமையா இருக்கணும்னு சொல்றேன்னு நினைக்கப் படாது. சம்சாரத்தை மந்திரியா வச்சுக்கலாம். ஆன, அவளே ராஜான்னு நினைக்கப்படாது. சுருக்கமாச் சொன்ன, அவ சொல்ற யோசனைகளைக் கேட்டுப் புருஷன் நடவடிக்கைகளை நடத்தோணும். அவளே நடவடிக்கைகளை நடத்தறவளா ஆயிடப்படாது. அதெல்லாம் போகட்டும் விஷயத்துக்கு வருவோம். இப்ப உனக்குப் பயந்து காசியை நான் வெளியே கூட்டிக்கிட்டுப் போக நினைச்சமாதிரி நீ சொல்லிட்டே, வா புளிச்சுதோ மாங்கா புளிச்சுதோன்னு பேசப்படாது மங்கை, என்று ஐயா சொன்னர்கள்.

"அடி ஆத்தி! கெணறு வெட்டப் பூதம் புறப்பட்ட மாதிரி நான் ஒண்ணு சொல்ல, ஐயா நீங்க ஒண்ணு நினைச்சுட்டிக. வெய்யில்லே ஏன் வெளியே போறிகன்னுதான் நான் சொன்னேன். அதுக்கு இம்புட்டுக் கடுசாப் பேசிட்டிக," என்று மங்கை ஆச்சி சொன்னர்கள்.

"இந்தா பாரு மங்கை, பேச்சை மாத்தற மடக்கிற விவகாரமெல்லாம் எனக்குப் புடிக்காது. அடுத்தவங்களைக் குறை சொல்றதனலே நம்ம குறை இல்லேன்னு போயிடாது. பக்கத்து வீட்டிலே இருக்கிற வெண்

ணெயைச் சுண்ணும்புன்னு சொல்றதனுலே நம்ம விட்டுச் சுண்ணும்பு வெண்ணெய் ஆகிடாது'' என்று ஐயா கூறினுர்கள்.

அதற்கு மங்கை ஆச்சி ஒன்றும் பதில் சொல்ல வில்லே. சிறிது நேர அமைதிக்குப் பிறகு, வாங்கய்யா கடைவீதிக்குப் போய்ட்டு வருவோம் என்று காசிச் செட்டியார் ஐயாவை அழைத்தார்கள்.

''வேண்டாம்ப்பா நாம பேச வேண்டியதை இங்கேயே பேசுவோம்'' என்று ஐயா சொன்னுர்கள்.

இதற்கிடையே உழுந்த மாவு ஆட்டித் தயாராக இருப்பதாக மீனுட்சி வந்து தாயிடம் சொல்லிவிட்டுப் போனுள். மங்கை ஆச்சி, நறுக்கிய வெங்காயத்தையும் அரிவாள் மணையையும் எடுத்துக்கொண்டு சமையற் கட்டுக்குப் போனுர்கள்.

ஐயா அங்கு வந்தவுடனேயே மங்கை ஆச்சியின் குணத்தை நன்கு புரிந்துகொண்டு விட்டார்கள். அதோடு காசிச் செட்டியார் சம்சாரத்துக்கு அடக்கம் என்பதையும் நன்ருகப் புரிந்து கொண்டார்கள். எனவே, மங்கை ஆச்சி இல்லாமல் காசிச் செட்டியா ருடன் தனிப்பட்ட முறையில் பேசினுல்தான் ஏதாவது அழுத்தமாகச் சொல்ல முடியுமென்று அவர்கள் கருதி னுர்கள். அதற்கு இப்பொழுது நல்ல சந்தர்ப்பம் என்று அவர்கள் எண்ணினுர்கள்.

காசிச் செட்டியார் ஏதோ பட்டும் படாமலும் பேசிக்கொண்டிருந்தாலும் ஐயா எதற்காக வந்திருக் கிருர்களோ என்ன கேட்பார்களோ என்று அவர்கள் மனம் படபடத்தது.

(தொடரும்)

## ஏழு செல்வங்கள்!

ஒரு செல்வம் என்ருலே உடன் சொல்ல மனம் வராது. ஏழு செல்வங்களேப் பற்றி அவ்வளவு எளிதாகச் சொல்லிவிட முடியுமா? கடைசிப் பக்கம் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள்.




# ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்

திரைகடல் ஓடித் திரவியம் தேடியதோடு இறைவனைப் பரவிப் பணிந்து அருளினைத் தேட நம் சமூகத்தினர் ஒருபோதும் மறந்ததில்லை.

இதற்கு பர்மாவில் உள்ள ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம் மிகச்சிறந்ததொரு எடுத்துக்காட்டாக விளங்கிப் பெருமை பெற்றதும் இன்றும் பெருமை பெறுவதும்ஆகும்.

சிவன் நாமம் மறவாச் சிந்தையினராகவும் முருகன் திருநாமம் மறவா மனத்தினராகவும் திகழ்கின்ற நாம் நம் முன்னோர்கள் செய்த செயற்கரிய செயல்களை அறிந்து கொள்வது இன்றியமையாதது.

நேற்றைச் செயல்கள் இன்றைய உலகின் வழிகாட்டிகள். வரலாறுகள் அல்லவா?

கடந்த நூற்றுஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே காசி முதலிய வடநாட்டுத் தலங்களில் பலவகை அறங்கள் நம் முன்னோர்களது. அவை இடையறாது செயல்படுவதற்காகச் சத்திரங்களை அமைத்து நற்செயல் புரிந்து வந்தார்கள். அதன் பின்னர் அந்த அறநிறுவனங்களின் நிர்வாகம் கல்கத்தாவில் தொழில் புரிந்துவந்த நம மரபுப் பெரியவர்கள் கைக்கு வந்தது. அதன் பின்னர் பர்மாவில் தொழில் புரிந்த பெரியவர்கள் கைக்கு மாறியது. 1930—ம் ஆண்டு பர்மா நகரத்தார் பெருமக்கள் பொதுக்கூட்டம் ஒன்றினைக்கட்டி அதில் ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் மானேஜிங் சொசைட்டி என்ற பெயரால் ஓர் அமைப்பினை உருவாக்கினார்கள் அந்த அமைப்பு மேற்கொண்ட நல்லறங்கள் கணக்கற்றவை.

காலப்போக்கில் பர்மாவில் ஏற்பட்ட அரசியல் மாறுதல், புதிய சமுதாயச் சட்டதிட்டங்கள்—சொசைட்டியின் பணியைத் தொடர்ந்து செய்துவரமுடியாத சூழ்நிலையை உருவாக்கிற்று. அதனால் 12-4-1964.ல் பர்மா நகரத்தார்கள் கூடி நிலைமையினை ஆலோ

சித்து சொசைட்டியினைக் கலைத்துவிட்டு 16 பேர்கள் கொண்ட இடைக்கால சபையினை அமைத்து அதன் நிர்வாகப் பொறுப்புகளை வகுத்தனர்.

அதில் 5 பேர் பர்மாவிலும் 11 பேர் தாயகத்திலும் இருந்து வருகிறார்கள்,

பர்மாவில் உள்ள உறுப்பினர்கள்

திரு. ப. மு. முத்தையா செட்டியார் (புதுப்பட்டி)
திரு. நா. லெ. இராமநாதன் செட்டியார் (ஒக்கூர்)
திரு. காந்தி அண்ணாமலை செட்டியார் (பள்ளத்தூர்)
திரு. அரு. சு. சுப்பிரமணியன் செட்டியார் (நாட்டரசன்கோட்டை)
திரு. சித. கும. சிதம்பரம் செட்டியார் (காரைக்குடி)

தாயகத்தில் உள்ள உறுப்பினர்கள்

திரு. சொ. சுப. சுப்பிரமணியன் செட்டியார் (பள்ளத்தூர்)
திரு. பழ. சண்முகம் செட்டியார் (இராமச்சந்திரபுரம்)
திரு. பி. சு. வ. பழனிப்ப செட்டியார் (விசுவநாதபுரம்)
திரு. மெ. நா. சொ. சொக்கலிங்கம் செட்டியார் (நாட்டரசன்கோட்டை)
திரு. மு. ப. மு நடராசன் செட்டியார் ,,
திரு. சொ. கண. கண்ணப்ப செட்டியார் ,,
திரு. வெ. பெரி. பழ. மு. காசிவிஸ்வநாதன் செட்டியார் (பாகனேரி)
திரு இரா. சீனிவாசன் செட்டியார் (பாகனேரி)
திரு. மது. கும நடராசன் செட்டியார் (வலையபட்டி)
திரு. ஆவி. க. பெ. அரு. தியாகராசன் செட்டியார் (தேவகோட்டை)
திரு. லெ. பழ. அரு. அருணாசலம் செட்டியார் (காரைக்குடி)

மேனேஜிங் சொசைட்டியின் செயற்குழுக்கூட்டம் 29-9-69-ல் மதுரையில் நடைபெற்றது அதில் 96 ஊர் நகரத்தார்கள் கோயிலூர் மடத்தில் கூடி புதிய உறுப்பினர்கள் தேர்தல் நடத்துதல்பற்றி முடிவு செய்யப்பெற்றது. பர்மா நாட்டுகோட்டை நகரத்தார்களின் அற உணர்வால் தோன்றிய இந்த அமைப்பினை சிறப்புற வளர்ப்பது ஒவ்வொரு நகரத்தாரின் கடமையும் ஆகும்.

## ஐக்கிய சங்கக் கூட்டங்கள்

நகரத்தார் ஐக்கிய சங்கத்தின் பேரவைக் கூட்டமும் பிரதிநிதிகள் கூட்டமும் 23-12-69 ஆம் நாள் காலையில் சென்னையில் நடைபெற்றது.

நகரத்தில்வாழ்கின்ற உறுப்பினர்களும் வெளியூர் உறுப்பினர்களும் விரிவாகக்கலந்து கொண்டார்கள். சிற்றுண்டி விருந்திற்குப் பிறகு செட்டிநாட்டரசர் டாக்டர் மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையுரையுடன் கூட்டம் தொடங்கிற்று.

சங்கத்தின் மூன்றும் ஆண்டு அறிக்கை, செயலாளர் திரு. சுப. சண்முகம் அவர்களால் வாசிக்கப் பெற்றது. அதிலிருந்து சில இன்றியமையாத பகுதிகளைக் கீழே தருகின்றோம்.

நன்கொடையாளர்கள் — 48

ஆயுள் உறுப்பினர்கள் — 21
ஆண்டு உறுப்பினர்கள் — 351

செட்டிநாட்டிலுள்ள எழுபத்தாறு ஊர்களில் வாழும் நகரத்தார் பெருமக்கள் 19724 புள்ளிகளுக்கும் கோயில் பிரிவு, கல்வித் தகுதி, வேலை தொழில்—போன்ற விவரங்களைச் செம்மையாகச் சேகரித்தது. இதுவரை (கடந்த நான்கு ஆண்டுகளாக) திருமண உதவியாக ரூ. 10500 இலவசக் கல்வி உதவி ரூ 22307 கடனுகக் கல்வி உதவி 34350 (மொத்தம் ரூ. 67157) கொடுக்கப் பெற்றிருக்கிறது.

நடப்பு ஆண்டிற்குக் கல்விக்கு என்று செயற்குழு ரூ. 5000 அனுமதித்திருக்கிறது. அதற்குமேல் வருகின்ற ரூ. 10000-ஐயும் மதிப்பிற்குரிய சங்கத் தலைவர் செட்டி நாட்டரசர் அவர்கள் தர இசைந்துள்ளார்கள். அதற்குச் சங்கம் தன்னுடைய நன்றியைத் தெரிவித்துள்ளது.

வேலையின்றி அல்லலுற்ற நம் குல இளைஞர்கள் பலருக்குச் சங்கத்தின் வேண்டுகோளை ஏற்று வேலைகள் கொடுத்து உதவிய தொழிலதிபர்களுக்கு நன்றி தெரிவித்துள்ளதோடு சங்கத்திற்குத் தகவல் தெரிவித்து இன்னும் பல இளைஞர்களுக்கு வேலை கொடுத்து ஆதரிக்க வேண்டுமென்று சங்கம் கேட்டுக்கொண்டிருக்கிறது.

பேரவைக் கூட்டத்தைத் தொடர்ந்து பிரதிநிதிகள் அவைக் கூட்டமும் செட்டிநாட்டரசர் அவர்களுடைய தலைமையில் நடை பெற்றது.

நகர, மற்றும் வெளியூர்ப் பிரதிநிதிகள் தங்கள் சீரிய கருத்துக்களைத் தெரிவித்தார்கள். சமூகத்தின் தேவைகளை உடனுக்குடன் அறிந்து உதவும் பொருட்டுக் காரைக்குடி கிளை அலுவலகத்திற்கு மாதந்தோறும் ரூ. 200 விகிதம் ஓராண்டிற்கு நிதி அளிப்பதென்றும் அத்தொகையை வழக்கறிஞர் திரு ச. மெய்யப்ப செட்டியார் M.L.A. அவர்களுக்கு அனுப்பி, அவர்கள் பொறுப்பில் சமூக நன்மைகளுக்குச் செலவிடுவது என்று தீர்மானிக்கப் பெற்றது.

செயலாளர் திரு. சுப. சண்முகம் அவர்கள் தமது பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டதால் திரு. கும. முருகப்பன் அவர்கள் ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

கீழ்க்கண்டவர்களைச் செயற்குழு உறுப்பினர்களாகச் சங்கம் முடிவு செய்தது.

திரு. கருமுத்து தியாகராச செட்டியார்
திரு. க. வெ. சித. வெ வெங்கிடாசலம் செட்டியார்
திரு. அ. மு. மு. அருணாசலம் செட்டியார்
திரு சுப சண்முகம் செட்டியார்
திரு ஆவி. க மெ அரு தியாகராசன் செட்டியார்
திரு. மு. அ. மு. சுப. வயிரவன் செட்டியார்
திரு. எஸ். ஏ. பி. அண்ணாமலை செட்டியார்
திரு. அ. மு. பழநியப்ப செட்டியார்
திரு. ப. வ ராம. குழந்தையன் செட்டியர்ர்
திரு. கா. சுப. சு. கதி காளையப்ப செட்டியார்

திரு. க. வெ. சித, வெ. வெங்கிடாசலம் செட்டியார் அவர்கள் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

22-12-69 ஆம் நாள் திங்கட்கிழமை மாலை 3 மணி அளவில் கல்விக் குழுக் கூட்டம் நடைபெற்றது. அதில் 1969-70 ஆம் ஆண்டிற்குப் பதினெட்டு மாணவ மாணவிகளுக்குப் புதிதாக கல்வித் தொகை வழங்குவதென்றும் முன் ஆண்டுகளில் உதவி பெற்றுக் கல்வி கற்றுவரும் இருபத்து மூன்று மாணவ மாணவிகளுக்குத் தொடர்ந்து உதவித்தொகை நல்குவதென்றும் அக்கூட்டத்தில் தீர்மானிக்கப் பெற்றது. புதிதாக உதவி பெறும் மாணவ மாணவிகளின் பெயர்களைக் கீழே தந்துள்ளோம்.

கடன் உதவி

| வ. எண். | பெயர் | படிக்கும் வகுப்பு | தொகை |
|---|---|---|---|
| 1. | அ. அ. ராம. சின்னையா, கொத்தமங்கலம் | B.B., | ரூ 500 |
| 2. | அ. ராம. ராமனுதன், நாட்டரசன்கோட்டை | Leather Tech., | ரூ 500 |
| 3. | பெ. தேனம்மை, கோனுபட்டு | M.SC,, | ரூ 500 |
| 4. | பெரி செந்தில்நாதன், கானுடுகாத்தான் | B.E.chem., | ரூ 500 |
| 5. | உ. ஆறுமுகம், கீழப்பூங்குடி | B.COM., | ரூ 300 |
| 6. | அள. அண்ணுமலை, காரைக்குடி | B.COM , | ரூ 200 |
| 7. | எம். சபாரத்தினம், தேவகோட்டை | B.A,, | ரூ 300 |
| 8. | நா. அழகப்பன். கோட்டையூர் | B.SC ,(Ag) | ரூ 300 |
| 9. | வீர. வீரசேகரன், புதுவயல் | B.SC.,(Ag) | ரூ 300 |
| 10. | என். கண்ணன், அரியக்குடி | B SC., | ரூ 300 |
| 11. | சி. கருப்பையா, பி. அளகாபுரி | B SC., | ரூ 300 |
| 12. | எம். செந்தில்நாதன், தேவகோட்டை | B SC. | ரூ 300 |
| 13. | வெ. செந்தாமரை. பாகனேரி | Poly. Tech., | ரூ 200 |
| 14. | எல் சிங்காரம், வேந்தன்பட்டி | B T,, | ரூ 200 |

இலவச உதவி

| வ. எண். | பெயர் | படிக்கும் வகுப்பு | தொகை |
|---|---|---|---|
| 15. | ராம. கலைச்செல்வி, காரைக்குடி | Viduvan | ரூ 200 |
| 16. | லெ. சிந்தாமணி. தேவகோட்டை | Viduvan | ரூ 200 |
| 17. | சி. பெரியாள். ஆ. முத்துப்பட்டணம் | B ED., | ரூ 200 |
| 18 | பழ. ருக்மணி, தேவகோட்டை | Teacher's Training | ரூ 200 |

# காரைக்குடியில் தமிழ்ச் சங்கம்

தோற்றுவிப்பவர்கள், அதில் பங்கு கொள்பவர்களைப் பொருத்தே சங்கங்களின் வாழ்வும் வளர்ச்சியும் இருக்கின்றன.

பெரும் தமிழ்ப் பேரறிஞரும் பண்புநலன்களில் நிகரற்றவருமான டாக்டர் வ. சுப. மாணிக்கனுர் அவர்கள் தலைமையில் காரைக்குடித் தமிழ்ச் சங்கம் என்ற பெயரில் காரைக்குடி மாநகரில் சங்கம் ஒன்று 9-11-1969ம் நாள் தொடங்கப்பெற்றுள்ளது என்பதனை மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கின்றோம்.

வள்ளல் அழகப்பரின் வண்மையால் காரைக்குடி தமிழகத்துக் கல்வித் தலைநகரங்களில் ஒன்ருக விளங்குகின்றது. அந்நகரில் ஒரு தமிழ்ச்சங்கம் தொடங்கப் பெற்றது பெரும் வரவேற்புக்குரியது.

இச்சங்கத்தின் துணைத்தலைவராக இராம. பெரியகருப்பன் அவர்களும் செயலாளராக மா. அ. ஞானசேகரபாண்டியன் அவர்களும் விளங்குகிறுர்கள்.

சங்கத்தின் குறிக்கோள் மற்றும் உள்ள விபரங்களைக் கீழே தருகின்றோம். தமிழகத்துப் பேரறிஞர்களை அழைத்து மாதந் தோறும் பேரிலக்கியச் சொற்பொழிவுகளை நடத்துதல், நூல் வெளியிடல். தமிழாக்கம் செய்தல், புதிய சொற்களை வழக்கத்துக்குக் கொண்டு வருதல், நல்ல தமிழ்வழங்கச் செய்தல் என்ற வகையான தமிழ்ப் பணி இதன் நோக்கம் ஆகும்.

புரவலர்கள் இன்றித் தமிழ் வளர்ந்ததில்லை. தமிழ்ப் புலவர் களுக்கும் தமிழ்ச் சங்கங்களுக்கும் புரவலர்களே செவிலியாவார்கள். காரைக்குடியில் இத்தமிழ்ச் சங்கம் அமைந்திருந்தாலும் 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்ற பரந்துவிரிந்த நோக்கமே இதன்பணி முறையாகும். எனவே தமிழ்வளர்ச்சியில் பற்றுடைய பேரன் பர்கள் ஆயுட் புரவலர் ஆக அமர்ந்து ஊக்கம்தர வேண்டுகின்றோம். ஆயுட்புரவலர் நன்கொடை ரூ. 50—100 வங்கித்தாளாகவோ பணவிடையாகவோ அளிக்கலாம். உதவும் இக்கொடையை முழுதும் தமிழ்ப் பணிக்கே பயன்படுத்தப்படும்.

தங்களின் அறம் தமிழ்வளம் ஆகும்.

நன்கொடை அனுப்பவேண்டியமுகவரி:

தலைவர். காரைக்குடித் தமிழ்ச் சங்கம்
கதிரகம் – காரைக்குடி-2.

# தமிழ்க் கடலுக்கு வரவேற்பு

ஈரோடு நகரத்தார் சங்கத்தில் 21–12–69ம் நாள் மாலை நான்குமணி அளவில் தமிழ்க் கடல் ராய. சொக்கலிங்கனார் அவர் களுக்கு வரவேற்பு அளிக்கப்பட்டது.

தமிழ்க்கடலைச் சங்கச் செயலாளர் திரு. சுப. முத்துக்கருப்பன் வரவேற்றார்கள்.

தமிழ்ப்பேர் உலகில் ஐயா அவர்கள் கடலாக விளங்குவதால் நகரத்தார் சமூக மக்கள் அனைவரும் எல்லையற்ற பெருமிதம் அடை கிறார்கள் என்பதனைக் குறிப்பிட்ட அவர்கள் விடுதலை இயக்கத்தில் ஐயாகொண்ட ஈடுபாடு பற்றியும் காந்தியடிகள், பாரதியார் முதலி யோரிடம் அவர்கள் கொண்டிருந்த தோழமைபற்றியும் சிறப்பாகக் குறிப்பிட்டார்கள்.

வரவேற்புரையினைத் தொடர்ந்து மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் சுப. அண்ணாமலை அவர்கள். ஐயா அவர்களின் சிறப்புக்களை விவரித்தார்கள்.

அடுத்து, மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ் விரிவுரை யாளர் டாக்டர் திரு தமிழண்ணல் அவர்கள் பேசும்போது தமிழ்க் கடல் அவர்களின் நினைவு ஆற்றல் சொ. முருகப்பா அவர்களுடன் ஐயா கொண்டிருந்த பங்கு முதலியவைபற்றி சிறப்பித்தார்கள்,

பினனர்—புலவர். கரு. காசி அவர்களும் ஏ எல். எஸ், தியாக ராசன்-பி,காம் அவர்களும் ஐயாஅவர்கள் சிறப்பியல்புகள் பற்றிச் பேசினார்கள். ஐயா அவர்கள் வரவேற்புக்கு நன்றி தெரிவித்துப் பேசும்போது, நகரத்தார்களின் சமயத்தொண்டு, திருப்பணிகள். முதலியவைபற்றி அழகுறக் குறிப்பிட்டார்கள். செயலாளர் நன்றி நவில விழா இனிது நிறைவேறியது.

# புத்தக அரங்கம்

## அரங்கில் இடம்பெறும் நூல் — கறிவேப்பிலே

### ஆய்ந்தவர் : புலவர் நாகசண்முகம்

மாடத்திற்குச் சித்திரம்; மாநகர்க்குக் கோபுரம்; ஆடவல்ல அழகிய தோள்களையுடைய நல்ல நங்கைக்கு அணி, இவை போன்றது நூலுக்கு முன்னுரை என்றார் நன்னூல் ஆசிரியர்.

சடங்காகப் பக்கங்களை நிரப்புகின்ற வெறும் பணியாக பல நூல்களிலே முன்னுரை என்ற பெயரால் இடம்பெறுகின்ற உரைகளை நோக்குகின்றபோது, நன்னூலார் இப்படியோர் இலக்கணத்தை ஏன் வகுத்தார் என்று நமக்குத் தோன்றுகிறது.

கறிவேப்பிலே நாடக நூலில் ஆசிரியரே எழுதியுள்ள முன்னுரையைப் படிக்கின்ற பொழுது பவணந்தியார் கூறியது எவ்வளவு பொருத்தம்! நூலுக்கு அது சித்திரம் தான்! கோபுரம் தான்! நல்ல அணிதான்! என்ற முழு நிறைவு நமக்கு ஏற்படுகிறது.

'நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவர்களை இக்கதைக்கு நான் மாந்தர்களாகத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். கதையுலகில் இது ஒரு மாற்றம் எனலாம்; எல்லாக் கதைகளிலும் ஐயர், முதலியார், பிள்ளைமார்களே வந்து செல்லுகின்றனர். நகரத்தார் சமூகத்தினரும் 'கதை புனைவதற்கு முழுக்கத் தகுதி படைத்தவர்கள் என்பதனை இக்கதை வலு காட்டும். நகரத்தார்களைக் கதைக் கருவாக வைத்து இன்னும் எத்தனையோ நாடகங்கள், நாவல்கள், சிறுகதைகள் எழுதலாம் என்பது என் கருத்து.'

நமது மரபினரைக் கதை உறுப்பினர்களாக்கி நாடகம் ஒன்று புனைய முனைந்துள்ளேன் என்பது போலக் கூருமல், "நகரத்தார் சமூகத்தினரும் கதை புனைவதற்கு முழுத் தகுதியுடையவர்கள் என்பதனை இக்கதையின் வலு காட்டும்" என்று நாடகத்தின் தன்மையினை வன்மையினை, எடுத்துக்கொண்ட முயற்சியிலே அவர்களுக்குள்ள தெளிவினை முன்னுரையிலேயே கூறிவிடுகிறார்கள். இந்தப் பொலிவுகளையெல்லாம் நாடகத்தைப் படிக்கின்றபோது நாம் முழுமையாக உணர்கிறோம்.

நகரத்தார்கள் வாழுகின்ற பகுதி தனிநாடு போலச் செட்டி நாடு என்று அழைக்கப்படுகின்ற தன்மை; வணிகத்துறையிலுள்ளோர் தாம் மேற்கொள்கின்ற தொழில்களுக்குச் செட்டி நாடு (செட்டி நாடு சிமெண்ட்ஸ்'— 'செட்டி நாடு உணவு விடுதி' என்பன போன்றவை) என்ற பெய

ரை ஏற்றிப் போற்றுகின்ற நிலை மை, முதலிய சிறப்புகளையும் பொருளாதார வீழ்ச்சியால் இன்று சமூகத்தில் ஏற்பட்டுள்ள கொடுமை மிக்க தாழ்வுகளையும் முன்னுரையில் குறிப்பிட்டுள்ளார்கள். அவற்றின் மூலம் வாழ்ந்த இனம் தாழ்ந்து கொண்டிருக்கிறது; கோபுரம் உயர்ந்து பயனில்லை, உள்ளே கொலுவிருக்கும் தெய்வத்திற்குச் சிறப்பிருக்க வேண்டும் என்பனவற்றை நம்மை நன்கு சிந்திக்க வைத்த பிறகே நாடகத்தைக் காண ஆசிரியர் நம்மை அழைத்துச் செல்லுகிறார். சுருங்கச் சொன்னால், கறிவேப்பிலை பொழுது போக்கு நாடகம் அல்ல. அது ஒரு கருத்துக் கோவை என்பதனை நாம் அறிந்த பிறகே நாடகத்தைப் படிக்க முற்படுகிறோம்; இனி நாடகத்தைப் பற்றிக் காண்போம்.

நாடகம் நிகழுகின்ற இடம், சிறுவயல் என்ற கிராமம். அவ்வூரிலுள்ள மாந்தர்களைக் கொண்டே நாடகம் பின்னிப் பிணைந்து செல்கிறது. இராமநாதன் செட்டியார் என்பவர்கள் பண்பும், பக்தியும், அன்பும், அறநெறியும் கொண்ட சிலர். அவரை அனைவரும் 'ஐயா' என்றுதான் அழைப்பார்கள். அதில் தடையென்ன? மெய்யாகவே அவர்கள் ஐயாதான். அவர்களுக்குக் கண்ணாத்தாள் என்று ஒரு மகள் விசாலாட்சி ஆச்சி என்று ஒரு தமக்கையார்.

காளையப்பச் செட்டியார் என்பவர் புதுப்பணக்காரர். செண்டு போடுவதிலும் சிண்டு வேலைகள் செய்வதிலும் சிறந்தவர். நாகரிக வில்லனுக்குரிய சாமுத்ரிகா லட்சணங்கள் அனைத்தும் பொருந்தியவர். எதையும் பணங்கொடுத்து வாங்கிவிட முடியும் என்ற திடநம்பிக்கையுடையவர். இவருடைய மனைவி அலமேலு ஆச்சி கணவனுக்கேற்ற குணங்கள் நிரம்பியவர்! இவர்களுக்கு இரண்டு பையன்கள், மூத்தவன் முத்தையா. இளையவன் சாத்தப்பன். மூத்தவன் சமூக சீர்திருத்தக் கருத்துக்களைக் கொண்ட பண்பட்ட இளைஞன்.

ஸ்டையில் சிதம்பரம் செட்டியார் என்பவர் இராமநாத ஐயா வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர். பக்கத்து வீட்டுக்காரர் துணையாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை; வினையாகவும் இருக்கலாம் என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டு.

இவர்கள் தவிர, சுப்பு குருக்கள், வீரப்ப சேர்வை, கருப்பையா அம்பலம் முதலியோர் இன்றியமையாக் கதாபாத்திரங்களாக விளங்குகிறார்கள்.

நாடகம் பொன்னழகியம்மன் கோயிலிலே தொடங்குகிறது. அந்தக் காட்சியில் நாட்டார்களும் நகரத்தார்களும் கலந்து வருகிறார்கள்.

முதல் காட்சியிலேயே முழுமையான செட்டிநாட்டுச் சூழ்நிலையை நாம் காண்கிறோம். கருப்பையா அம்பலமும், வீரப்பச் சேர்வையும் அங்கே வந்த இராமநாத ஐயாவைக் கைகூப்பி வணங்குகிறார்கள். ஆலயத்தில் அம்மனைத்தான் வணங்க வேண்டும்; அடுத்தவர்களை வணங்கக் கூடாது என்று ஐயா சொல்கிறார்கள். "எங்களுக்கு அம்பாளும் ஐயாவும் ஒன்றுதான்!" என்று அம்பலமும் சேர்வையும் சொல்கிறார்கள். முதலிலேயே ஐயாவின் நல்ல பண்பினையும் நகரத்தார்கள் மட்டுமல்லாமல் நாட்டார்களும் அவரைத் தெய்

வமாக மதிக்கின்ற தன்மையினை யும் நாம் காண்கின்றோம்.

அப்படிப்பட்ட தெய்வத்தின் மீதுதான் காளையப்பச் செட்டியார் பொறுமைப்படுகிறார். காரணம் புகழ், ஆசை, ஊராட்சித் தலைவராகவும், கோயில் காரியக் காரராகவும் மக்கள் உள்ளங்களில் எல்லாம் தெய்வமாகவும் இருக்கிறார் என்ற புகைச்சல்.

புகை நெருப்பாகின்ற நிலைமை நேர்கின்றது.

காளையப்பச் செட்டியார் நாட்டார் வீட்டுப் பையன் ஒருவனைச் செருப்பால் அடித்துவிடுகிறார். ஊர்ப்பொதுமக்கள் அதுபற்றி விசாரிக்கக் கோயிலிலே கூடிவிடுகிறார்கள். தீர்ப்புச் சொல்ல வேண்டிய கடமை ஐயாவிற்குரியது. அந்த வழக்கில் சாட்சி இல்லை ஐயாவின் சாமர்த்தியம் யாருக்கு வரும்? அவர்கள் அம்மனையே சாட்சியாக்கித் திருவுளச் சீட்டின் மூலம் உண்மையறிந்து காளையப்பச் செட்டியார் குற்றவாளிதான் என்று தீர்ப்பளிக்கிறார்கள்.

காளையப்பச்செட்டியார் ஐயாவுக்கு நேரடியாகப் பகையாக மாறுகிறார். ஐயாவைக் கால் தூசு ஆக்கிவிடுவதாகச் சபதம் இடுகிறார். திட்டமிட்டு அடுக்கடுக்காக ஐயாவுக்குப் பல துன்பங்களைக் கொடுக்கிறார்.

பர்மாவில் நிலம் வாங்கிவிடுவதும் முப்பதினாயிரம் ரூபாய்க்குப் பொன்னழகி அம்மனுக்கு வைரத் தாலி செய்து வைப்பதும் எதிர்பாராது பர்மா கெட்டுப் போவதும் ஐயாவை நொடிக்க வைத்துவிடுகின்றன. இமயமாக இருந்த அவர்கள் நிலை, பெரும் பள்ளமாகப் போய்விடுகிறது. இறைக்க இறைக்கத்தான் ஊறும் என்றாலும் கிணறு தூர்ந்து விடாமலும் பார்த்துக் கொள்ளவேண்டும் என்பதற்கு ஐயா வாழ்க்கையைவிட, சிறந்த உதாரணத்தைக் காண முடியாது.

வினையை விதைத்தவன் தினையை அறுக்க முடியாது.

ஐயாவை எப்படியும் அவமானப்படுத்திவிட வேண்டும் என்று கச்சை கட்டிய காளையப்பச்செட்டியார் கடைசியில் கச்சையை இழந்துவிடுகிறார். அவரிடமிருந்து அந்தக் கச்சையைக் கைப்பற்றியவர் வேறு யாருமில்லை, அவர் மகன் முத்தையா தான்!

ஒரு நாடகம் பல சுவைகளும் நிறைந்து வியக்கத்தக்க வகையில் உச்சக்கட்டத்தை அடைந்து முடிய வேண்டும்.

இது வேண்டிய கதாபாத்திரங்களை எடுத்துக்கொண்டு தக்க கருவினையும் அமைத்துக்கொள்கிற போது எளிதாக இருக்கலாம். ஆனால், ஒரு சமூகத்தாரை அடித்தளமாகக் கொண்டு அவர்களையே கதாபாத்திரங்களாக ஆக்கி நாடக உத்திகளைக் கையாண்டு வெற்றி பெறுவதென்பது மிகவும் அரியது. அழசப்பர் முழுமையாக வெற்றிபெற்றிருக்கிறார்கள். அரியது, அவர்களுக்கு எளிதானதற்குக் காரணம் அவர்கள சமூகத்தில் கொண்டுள்ள பற்றும், எப்படியும் இந்தச்சமூகம் திருந்திவிட வேண்டும் என்பதில் அவர்கள் கொண்டுள்ள ஆர்வமும்தான் காரணங்கள் என நினைக்கிறேன். நினைப்பதென்ன, நாடகத்தில் வருகின்ற ஒவ்வொரு காட்சியும் நமக்கு அவற்றைப் புலப்படுத்துகின்றன.

நகரத்தார்களுக்கு என்று

இருக்கின்ற குண இயல்புகளும் தனிச் சிறப்புகளும், குறைபாடுகளும்கூட, ஒன்றுவிடாது நாடகத்தில் இடம்பெற்றுள்ளன. இதைச் சொல்கிறபொழுது இன்னொன்றை இன்றியமையாது குறிப்பிடவேண்டும். ஆசிரியரால் சொல்லப்படுகின்ற கருத்துக்களெல்லாம் நாடகத்தோடு இரண்டறக் கலந்து விளங்குகின்றன. அதுதான் பெரிய வெற்றி.

கதாபாத்திரங்களின் குண இயல்புகள் ஒரு சிறிதும் வழுவில்லாது விளங்குகின்றன. எந்தக் கருத்தை யார் மூலம் சொல்ல வேண்டும் என்பதில் ஆசிரியர் மேற்கொண்டிருக்கிற கவனம் நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது.

தன் மகள் கண்ணாத்தாள் திருமணத்தில் கவனம் மேற்கொள்ளாமல் பர்மாவில் நிலம் வாங்குவதிலும், பொன்னழகி அம்மனுக்கு வைரத் தாலி செய்வதிலும், ஊருக்கு உழைப்பதிலும் தன் வாழ்நாளைக் கழிக்கின்ற இராமநாத ஐயாவைப் பார்க்கின்றபோது தொடக்க முதல் நாம் துன்பத்திற்கு ஆளாகிக் கடைசியில் துடிப்பிற்கும்ஆளாகி விடுகிறோம். கண்ணாத்தாள் நம்முடைய சொந்த சகோதரிஎன்ற உணர்வே நமக்கு மேலிடுகிறது. ஊருக்கு உழைத்துழைத்துத் தேய்ந்த இராமநாத ஐயாவை ஊரார் கறிவேப்பிலையாக்கி விடுகிறார்கள். ஆனால் அவர் தெய்வமாகிவிடுகிறாரே! இல்லையென்றால் கண்ணியமும் கடமையுணர்வு மற்ற க. ளையப்பச் செட்டியார் மனம் திருந்தி 'என் இளைய மகன் சாத்தப்பனை ஐயாவுக்குச் சுவீகாரம் செய்து வைக்கிறேன்' என்று சொல்வாரா?

நாடகத்தின் பெயர் கறிவேப்பிலையாக இருக்கலாம். ஆனால் அது ஊட்டச் சத்தும், உயிர்ச் சத்தும் நிறைந்த உணவாக விளங்குகிறது. இது ஒவ்வொரு நகரத்தார் வீட்டிலும் இருக்க வேண்டிய நல்ல நூல். படிக்க வேண்டிய சிறந்த நூல், பயன் பெற வேண்டிய உயர்ந்த நூல்.

அதுமட்டும் போதுமா? ஊர்கள்தோறும், திருவிழாக்கள் தோறும் சங்கங்களின் ஆண்டு விழாக்கள் தோறும் கறிவேப்பிலை நாடகமாக நடிக்கப்பட வேண்டும். எழுத்தைவிட, பேச்சைவிட, நாடகம் விரைந்த பலனை நல்கும் என்பது நாம் அனைவரும் அறிந்ததே. இந்த நல்ல முயற்சியில் நம் குலத்து இளைஞர்கள் அனைவரும் தீவிரமாக ஈடுபடவேண்டும். நம் குலத்தின் வருங்காலம் எழில் பெற்றுத் திகழ்வதும் வளமற்றுப் போவதும் இளைஞர்கள் கையில் தான் இருக்கிறது. கறிவேப்பிலை நாடகத்தில் வரும் முத்தையாவாக நம் இளைஞர் ஒவ்வொருவரும் ஆகவேண்டும் என்பதே என் பேராவல். ஆவல் நிறைவேறுமென்றும் இளைஞர்கள்முன்னேறுவார்கள் என்றும் நம்புகிறேன்!

தலைப்பு : கறிவேப்பிலை
பிரிவு : நாடகம்
ஆசிரியர் : ஆறு அழகப்பன் எம்.ஏ.எம்.லிட்.,
விலை : ரூபாய் ஐந்து

விற்பனை உரிமை :
வானதி பதிப்பகம்
82-11, பாண்டிபஜார்
சென்னை-17.



# இரண்டு நாடுகளில் இருபது நாட்கள்

எம். அருணசலம்



பேரவைக் கூட்டத்தில் பங்குபெற்ற இந்திய உறுப்பினர்களில் சிலர்

உலக சமாதானப் பேரவைக் கூட்டத்திற்குப் பின் பேரவை உறுப்பினர்களில் சிலர் அவரவர்கள் நாட்டிற்குத் திரும்பினர். மற்றவர் மூன்று பிரிவினராகப் பிரிந்து ஒவ்வொரு பிரிவினரும் நாட்டின் ஒவ்வொரு பகுதியினைக் காணச் சென்றனர். எங்கள் குழு இத்தாலி, கானு இலங்கை ஆகிய நாடுகளின் உறுப்பினர்களைக் கொண்டதாகும்.

நாங்கள் முதலில் சென்றஇடம் ஹாலே நகரமாகும். 27-6-69 ஆம் நாள் காலை 6 மணிக்கு பெர்லின் நகரிலிருந்து இரு உல்லாசப் பேருந்துகளில் சென்ற எங்கள் குழு பகல் 2 மணிக்கு ஹாலே நகரை அடைந்தது. வசதியான பேருந்து; வழவழப்பான சாலை. வழி எல்லாம் இரு மங்கிலும் பச்சைப் பசேலென்று பயிர்கள், கண்ணுக்குக் குளிர்ச்சியான காட்சி; இதனல் அலுப்பே இல்லாத பிரயாணம்.

நகரை அடைந்ததும் எங்களுக்காகக்காத்திருந்ததுநகரசபைவரவேற்பு. அதற்குப் பின் மேயர் அளித்த பகல் விருந்தும்முறையே



ஹாலே நகரில் உள்ள பூங்காவில் குழந்தைகள்
பகுதியும், நவீன ராட்டினமும்

முடிந்தது.

ஹாலே, உலகப் போருக்குப் பின் உருவாகிய நவீன நகராகும். நகர அமைப்புப் பாணியில் ஈடு இணையற்ற நகரம், ஒவ்வொரு நாட்டினரும் கண்டு பின்பற்ற வேண்டிய சிரிய கவின்மிக்க அமைப்பு முறை. ஐந்து அடுக்கு களுக்குக் குறையாத அருமை யான கட்டிடங்கள். நகரின் மத்தியில் அங்காடிகள்; அகன்றசாலை கள்; அவற்றின் மத்தியில் அந்தரத்தில் கம்பிகளில் பூத்துக்குலுங் கும் அழகிய பூச்செடிகள்; குரோட்டன்சுகள்; சாலையின் இரு பக்கங்களிலும் வானளாவி நிற்கும் உயர்ந்த நிழல் தரும் மரங்கள்; ஆங்காங்கு கவின்மிகு பூங்காக்கள்; அவற்றில் குழந்தை களுக்கென விளையாட்டு அரங்குகள். பொழுது போக்கு நிலையங்கள்; வகைவகையானகுடைராட்டினங்கள்; மழலைச் செல்வங்கள் மகிழ்ந்து விளையாட மனமகிழ் மன்றங்கள் இத்தனையும் கொண்டது இந்நகரம்—இவைமட்டுமா; தொழில் துறையிலும் இந்நகரம் முன்னணியில் உளளது. நாட்டிலேயே மிகப்பெரிய ரசாயன ஆலையையும் புகழ்பெற்ற ஆர்வோ பிலிம் தொழிற்சாலையையும் மற்றும் பல தொழிற் கூடங்களையும் கொண்ட பெருமை பெற்றது. சுமார் 400 வித ரசாயனப் பொருட்களை உற்பத்தி செய்யும் லொய்னு ரசாயன ஆலையில் 30000 தொழிலாளர்கள் பணியாற்றுகின்றனர் என்றால் அதன் பெருமையைச் சொல்லவும் வேண்டுமோ?

ஹாலே மற்றொரு விதத்திலும் பெருமை பெற்றது. புத்தமதம் பிறந்தது இந்தியாவில். அது வளர்ந்தது அந்நிய நாடுகளான சீனா, ஜப்பான், இலங்கை, இந்தோசீனா முதலிய தூர கிழக்கு நாடுகளாகும். அம்மதத்தின் அடிப்படைகளையும், நூல்களையும் அவற்

றின் மூலம் குறிப்பாக அக்கால சமுதாயத்தையும் ஆராயும் நிலையம் ஒன்று இங்கு இருக்கிறதென்றால் நீங்கள் நம்புகிறீர்களா? அந்நிலையம் பல நாடுகளில் பல மொழிகளில் வெளிவந்துள்ள புத்தமத நூல்களைச் சேகரித்து ஆராய்ச்சி செய்வதுடன், அந்நூல்களின் மொழிபெயர்ப்பும், ஆராய்ச்சிக் கட்டுரைத்தொகுப்புகளுமாகச்சுமார் 500-க்கு அதிகமான நூல்களை வெளியிட்டுள்ளதென்றால் இன்னும் வியப்பாக



ஆசிரியருடன் இத்தாலிஃஎம் பி. ஆன்தொனி ஜெசுப்பே

இருக்கிறதல்லவா? இவை அனைத்தும் உண்மை.

ஹாலே நகருக்கும், சென்னை நகருக்கும் ஓர் உறவு உண்டு என்பது பலருக்குத் தெரியாது. 1968-ல் அன்றைய சென்னை மேயர் திரு சம்பந்தம் அவர்கள் தலைமையில் சென்னை மாநகராட்சி மன்றத்துக் குழு ஒன்று ஹாலே நகருக்குச் சென்றபொழுது சென்னை—ஹாலே நகரங்களுக்கிடையே நகர உறவு ஒப்பந்தம் ஒன்றை உருவாக்கும் தீர்மானத்தை நிறைவேற்றினது. அதனைத் தொடர்ந்து 1968-ல் நம் மாநில ஊராட்சித் துறை அமைச்சர் மாண்புமிகு திரு, மெ. முத்துசாமி அவர்களும், அன்றுள் சென்னை நகர மேயர் டாக்டர் ஹபிபுல்லா பேக் தலைமையில் ஒரு தூதுக்குழுவும் ஹாலே சென்று வந்தனர். அக்குழுவின் அழைப்பிற்கிணங்க ஹாலே நகர்மன்றக்குழு 1969-ல் ஜூன் திங்களில் 10 தினங்கள் தமிழகத்தில் சுற்றுலா நடத்தியது. சென்னை நகர்மன்றத் தலைவர், உறுப்பினர்கள் கமிஷனர் முதலியோருடன் அளவளாவினர். மாநகராட்சியின் முக்கியமான திட்டங்களையும், பணிகளையும் பார்வையிட்டனர். இறுதியில் வெளியிடப்பட்ட கூட்டறிகையில் 1967-ல்செய்துகொண்ட இரு நகர உறவு ஒப்பந்தத்தை வலியுறுத்தி இரு நகர மக்களும் தங்கள் அறிவுரைகளையும், அனுபவங்களையும் பரிமாறிக்கொள்வதென்றும் வற்புறுத்தப்பட்டது. இந்நகரங்களின் இந்த உறவை எண்ணி மிகவும் பற்றுதலோடு ஹாலே நகரினைக் கண்டுகளித்தோம்.

# செய்தி மலர்

★ கடல் கடந்தால் நாடு மாறும். உள்ளம் மாறுமோ? ஒருபோதும் மாருது. நம் மரபினர் எந்த நாட்டிற்குச் சென்ருலும் வேலை மறப்பதும் இல்லை: வேலையைக் கழிப்பதும் இல்லை. செல்லுகின்ற இடங்களில் எல்லாம் செந்தில் வேலனுக்கு சிறந்த வழிபாடுகள் நடத்தத் தவறியதில்லை. இதற்கு பெரிய எடுத்துக் காட்டாக இரங்கூன் பசுமந்தான் நகரில் முகல் வீதியில் விளங்குகின்ற தண்டாயுதபாணி ஆலயம் திகழ் கின்றது. நூறு ஆண்டுகளுக்கு முன்னர் பர்மாவில் வாழ்ந்த நம் முன்னேர்களால் இது அமைக்கப்பெற்றதாகும்.

இந்த ஆலயத்தில் ஆண்டு தோறும் தைப் பூசத் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இவ்வாண்டும் நடக்க இருக்கிறது என்பதனை பெருமிதத்துடன் தெரிவித்துக் கொள்கின்ருேம்.

★ ஆலயம், ஊருணி அமைத்தல், வேத பாடசாலைகள், கல்விக் கூடங்கள், சத்திரங்கள். அறக் கட்டளைகள் முதலியவற்றைத் தோற்றுவித்தல் என்ற இது போன்ற அறச்செயல்களில் நம் மரபினரை வென்றவர்கள் யாரு மில்லை. ஆனலும் காலத்திற் கேற்ப அறம் செய்யும் முறைகள் வேறுபடவேண்டிய சூழ்நிலைகள் உருவாகின்றன. இதனை ஒட்டி திரு. ஆறு. அழகப்பன் அவர்கள் காலத்திற்கேற்ற அறம் ஒன்றி னைச் செய்ய முன் வந்திருக்கிருர் கள் என்பதனை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கின்ருேம். நமது சமூகத்தில் நல்ல மாற்றங் கள் ஏற்படவேண்டும் என்ற அடிப்படையில் எழுதப்பெற்ற கறிவேப்பிலை நாடக நூலின் வரு மானத்திலிருந்து வருகின்ற தொகையில் ஒரு கணிசமான பகுதியை நம் சமூகத்து சீர் திருத்த நற்பணிகளுக்கு கொடுக்க முன் வந்துள்ளார்கள், இதனை தென்ஞர்காடு மாவட்ட நகரத் தார் சங்கம் மூலம்செய்யத்திட்ட மிட்டு அறிவித்துள்ளார்கள். பொது அமைப்புக்கள் நல்ல திட்டங்களை மேற்கொள்ளவேண் டும். அதற்கு தனிப்பட்டவர் களும் தக்க துணையாக இருக்க வேண்டும் என்பதற்கு திரு. அழ கப்பரின் திட்டம் நல்ல எடுத் துக்காட்டாக விளங்குகிறது.



# திருமுகம்

## கைவந்த கலை

தெய்வப்பணிகள், சமூகப்பணிகள் ஆற்றியவர்கள், விருதுகளும் சிறப்புகளும் பெற்றவர்கள். தொழில்துறை வல்லுனர்கள் மற்றும் பல்துறைகளிலும் கலைஞர்களாக விளங்கும் நம்குலப் பெரியவர்கள் ஆகியவர்களின் படங்களை அட்டையில் இடம்பெறச் செய்வீர்கள் என எதிர்பார்க்கின்றேன்.

திருத்தல வரலாறுகள், பெருமைமிக்கவர்கள், கோயில்களின் வரலாறுகள் இவற்றை வெளியிட்டால் பெரும்பயனாக இருக்கும்.

அதோடு செட்டிநாட்டு ஆச்சிகளின் திறமைக்கு எடுத்துக்காட்டாக—அவர்களின் கைவந்த கலையாக விளங்கும் தாலாட்டு ஒப்பாரிப் பாடல்களை வேண்டிப் பெற்று வெளியிட்டால் வருங்காலச் செல்வியருக்குப் பேருதவியாக இருக்கும்.

என். மெய்யப்பன் D.E.E.
நற்சாந்துபட்டி

## மானம் நிலைக்கும்

முறைதலை சீர் வரிசைகளின் மிகுதியால் மணப்பருவமெய்திய பல பெண்கள் வாழ்வு பெறமுடியாமல் இருக்கின்றார்கள் இதனால் அந்தப் பெண்களைப் பெற்ற பெற்றோர்கள் மனமுடைந்து வாழ்கிறார்கள், ஆனால் செலவுகளைக் குறைத்துச்சிக்கன முறையில்திருமணங்களைச் செய்கின்ற மனம் மட்டும் ஏனோ இன்னும் நம் மரபினரிடையே வரவில்லை. நடுத்தரக் குடும்ப மக்களிடையே இந்த மனநிலை ஏற்பட்டால்தான் பல பெண்கள் மணம் பெறுவர்; குடும்ப மானமும் நிலைக்கும்.

இராம. சாத்தப்பன்
திண்டுக்கல்.

## கவனியுங்கள்

டிசம்பர் இதழை ஏப்ரலில் வெளியிட்டுவிட்டு ஆச்சரியப்படுவதில் என்ன இருக்கிறது. பிரதிகளை அந்தந்த மாதத்தில் வெளியிட்டால் சுவையாக இருக்கும் கவனியுங்கள்.

மெ. இராமநாதன்
குண்டூர்.

அறுபது ஆண்டுகளுக்கும் மேலாகத் தமிழ்ப் பணியும் சைவத் திருப்பணியும் புரிந்து வரும் சன்மார்க்கசபை என்ற அமைப்பு எங்கள் ஊரில் இருந்து வருகிறது. அதன் உறுப்பாகிய கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் பல வெளியூர் மாணவர்கள் பயின்று வருகிறார்கள். உயர்நிலைப் பள்ளி, தொடக்கப்பள்ளிகளும் உள்ளன. இவ்வளவு இருந்தும் உந்து வண்டிக்காரர்கள் எங்

கள் ஊரை ஒரு நிறுத்துமிடமாகக் கொள்ளவில்லை என்பது பெரிய வேதனைக்கு உரியதாகும். எங்கள் ஊரிலிருந்து மதுரைக்குச் சென்றால் பொன்னமராவதியிலிருந்து புறப்பட்டதாகவும், புதுக்கோட்டைப் பகுதிக்குச் சென்றால் வேந்தன்பட்டியில் ஏறியதாகவும் கணக்கிட்டுப் பணம் பெறுகிறார்கள். இது மிகவும் வேதனைக்குரியதாகும். இந்த நிலை என்று திரும் என்று தெரியவில்லை மேலைச்சிவபுரியை ஒரு நிறுத்துமிடமாகச் (பஸ் ஸ்டாப்) செய்ய நீங்களாவது முயன்று வெற்றி காண்பீர்கள் என நம்புகின்றேன்.

என். எம். எம், பாண்டியன்
(மேலைச்சிவபுரி)
மதுரை.

## பலமும் பயனும்

நகரத்தார் நலனையே கருதி வெளிவரும் இந்த இதழை நம் இனத்துப்புள்ளிகள் ஒவ்வொருவரும் மனம், சொல், செயல், பொருள் முதலிய எல்லா வகையிலும் ஆதரிக்க வேண்டிய கடமை உடையவர்கள். தன வணிக இனப் பெரியவர்கள் இதற்குத் தக்க வழிகாட்டி நடக்கச் செய்ய வேண்டும், தெய்வத் துணையுடன் செல்வத்துணையும், மிக வேண்டப்படும் காலம் இது. துணைவரும் தெய்வம் செல்வம் இணைவர, வழிதுலங்க வேண்டுகின்றேன். இதழ் சீரோடும் சிறப்போடும் வளர எனது சில கருத்துக்களைத் தெரிவிக்க வேண்டுகின்றேன்.

ஆச்சிமார் பேட்டியில் பாட்டிமார் வாக்கையும். நோக்கையும் வரும்படி செய்தால் புதுமை, பழமை. இரண்டின் நலன், தீங்குகள் இரண்டும் புலப்படும் கருத்துக்கள் வெளிப்படும் அல்லவா? படிக்க இனிமையும் கருத அருமையும் இந்த மாறுபடு பேட்டியால் கூடிவரும் அல்லவா?

இதே போல இளந்தலைமுறைப் பட்டதாரிகளின் பேட்டிகளையும் பழந்தலைமுறையினரின் அனுபவ மிக்க பேட்டிகளையும் வெளியிட்டால் சமுதாயத்தில் நம் இனம் வளர வழி தோன்றும்.

எண்ணத்தால், சொல்லால், செயலால் செட்டி மக்கள் அன்றும்—இன்றும்-என்றும் தூயவர்கள், நாணயமானவர்கள், நீதிமான்கள் என்ற பெருமதிப்பை (இதுஇன்னும் முற்றிலும் கெட்டுவிடவில்லை; அழிந்து வருகிறது.) நிலைக்கச் செய்ய வேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும்,

இல்லறம், வணிகம், துறவு, பக்தி, இவைகளில் இணையற்ற செல்வரான நம் இனப்பெருமகனார் "பட்டினத்து அடிகளின் வாழ்க்கை உபதேசங்களையும் பாடுவார் முத்தப்ப செட்டியாரின் பாடல்களையும் இன்னும் நம் இனத்துப் பெரியவர்களின் தரும காரியங்கள், நீதிச்செயல்கள் (பஞ்சாயம் செய்த வழக்குகள்) அரிய வாக்குகள் இவைகளை வெளிக்கொணர்ந்தால் நம் இனத்து இளைஞர்களின் அறிவு செறிவு பெறும்,

செட்டிநாட்டரசர். மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள், கருமுத்து தியாகராசச் செட்டியார் அவர்கள், ஏ. வி. மெய்யப்ப செட்டியார் அவர்கள், அ. மு. அருணாசலம் செட்டியார் அவர்கள், அ. நாகப்ப செட்டியார் அவர்கள். மு. சித. முத்தையா செட்டியார் அவர்கள் ஆகிய பெருமக்களை அணுகி நகரத்தார் இதழ் தன்னை நம் இனத்து மக்கள் அனைவரும் ஆதரிக்க வேண்டும் என்று கூட்ட

றிக்கை ஒன்றினை வெளியிடுமாறு செய்தீர்கள் ஆனால் பத்திரிக்கையும் பலம் பெறும். நம் இனத்து மக்களும் பயன் பெறுவார்கள்.

வ. முத்துநடேன்
ஸ்ரீகதிரேசன் மின்னியல் அச்சகம்
விருத்தாசலம்
(வலையப்பட்டி)

## ஆதரவு உண்டு

நகரத்தார் பிரதிகள் வாயிலாக, தாங்கள் நம் சமூகத்தினரைப் பற்றிய செய்திகளைச்சிரமப் பட்டுச் சேகரித்து, சுவையாக வெளியிடுவதறிந்து மகிழ்கின்றேன். தங்கள் முயற்சிக்கு என் பாராட்டும் வாழ்த்தும் உரியன. நகரத்தார் திங்கள் இதழ் நாள் தோறும் செழித்து வளர என் பாராட்டுக்களும் ஆதரவும் உண்டு

**செல்வங்கள் ஏழு!**

செல்வத்தில் எளிமை
கோபத்தில் பொறுமை
தோல்வியில் விடாமுயற்சி
வறுமையில் பரோபகாரம்
துன்பத்தில் தைரியம்
ஏழ்மையில் நேர்மை
பதவியில் பணிவு

என்பதனை அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

கும. முருகப்பன்
B.COM., (HONS) B.L., A.I.C.W.A.,
செயலாளர்
நகரத்தார் ஐக்கிய சங்கம்
சென்னை-1


உடன் பிறக்காத துணைவன்! உற்ற நல்ல நண்பன்!

**சைக்கிள்!**

சைக்கிள் உலகில் நிகரற்ற பெயர்

நாகப்பா




136-A, திண்டுக்கல் சாலை, : : மதுரை.

கிளை நிறுவனம் :

நாகப்பா சைக்கிள் மார்ட் நெய்வேலி-3.

துணை நிறுவனங்கள் :

நாகப்பா டிரேடர்ஸ், தஞ்சாவூர்.
நாகப்பா சைக்கிள் மார்ட், திருச்சி.
நாகப்பா சைக்கிள் மார்ட், கும்பகோணம்.



சென்னை-14 நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸில் அச்சிடப் பெற்று
சேது நிலையத்திற்காக வெளியிடுபவர் பழ. சேது ஆச்சி.,
12, இராமாநுசம் தெரு, சென்னை-17 தமிழ்நாடு
ஆசிரியர்—புலவர் நாகசண்முகம்